மொருவனேயென்ன வுணரவல்லீரோ *
லருவினைகளைந்து மறும் *

இப்படியென்று ஔவைசொல்லச் சங்கத்தார் நாணமுற்று இவனை வெல்லப்படாதென்று திருவள்ளுவரைப் பார்த்து நீ ரெந்தவூ ரென்றதற்கு அவர் சொல்லியது

(வெண்பா)

எந்தவூரென்றீ ரிருந்தவூர்நீர்கேளீ *
ரந்தவூர்செய்தி யறியீரோ - வந்தவூர் *
முப்பாழும்பாழாய் முடிவிலொரு சூனியமா *
யப்பாழும்பாழா யறும் *

என்றிதுமுதலான ஞானார்த்தமான செய்யுட்களா லவர் வினவியவைகளுக் கெல்லாம் உத்தரவு சொல்ல, இவரையும் வெல்ல வரிதென்று இடைக்காடருடனே பேச அவர் சொல்லியது

(வெண்பா)

ஆற்றங்கரையி னருகிருந்தமாமரத்திற் *
காக்கையிருந்து கஃகுகஃகெனக - காக்கைதனை *
யெய்யக்கோலில்லாம லிச்சிச்செனவெய்தான் *
வையக்கோனார்தன் மகன் *

இதுபோன்ற அனேகஞ்செய்யுட்களை அவர்களா லெழுதப்படாமலும் கற்றுக்கொள்ளப்படாமலுஞ் சொல்ல நாணித் தோறபடைந்தார்கள்



# திருவள்ளுவநாயனார்

சரித்திரவரலாறு முற்றிற்று.





சிவமயம்.



பாயஞாதுணை

# திருக்குறளதிகாரஸ்வரூபசூசகம்.

## அறத்துப்பால்.



திருவள்ளுவமாலையுள்- எறிச்சலூர்மலாடனார்
அருளியஅறப்பால் அதிகாரத்தொகை

வெண்பா

பாயிரநான் கில்லற மிருபான் பன்மூன்றே. . ...*
தூய துறவறமொன் றூழாக - வாய .. ... . *
வறத்துப்பா லல்வகையா வாய்ந்துரைத்தா நூலின் *
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து . .......... ....*



## முதல் இயல்-பாயிரம்.

### முதலாம் - அதிகாரம் - கடவுள் வாழ்த்து.

“கவி,, தான் வழிபடுகடவுளையாதல், எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக்கடவுளையாதல், வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த்து ஏற்புடைக்கடவுளையெனவறிக [என்னை, சத்துவ முதலிய குணங்களான் மூன்றாகிய வுறுதிப் பொருட்கு. அவற்றான் மூவராகியும், முதற்கடவுளோ டியைபுண்டாகலான் அம்மூன்றுபொருளையுங் கூறலுற்றார்க் கம்மூவரையும்வாழ்த்துதன்முறைமையாகலின், இவ்வாழ்த்து அம்மூவர்க்கும்பொதுப்படக் கூறினாரெனவுணர்க.]

### ௨-ஆம்-அதி- வான்சிறப்பு.

மழையினது சிறப்பு (அஃதாவது) கடவுளது ஆணையால் உலகமும், அதற்குறுதியாகிய அறம்பொருளின்பங்களும்,

டத்தற் கேதுவாகியது மழையாதலால—அதன் சிறப்பைச் சொல்லுதல.

௩-ஆம்- அதி- நீத்தார்பெருமை

முற்றத்துறந்த முனிவரது பெருமை அவ்வற முதலாகிய பொருள்களையுலகத்திற்குள்ளவா றறிவிப்பவரவராதலால்—இது வான்சிறப்பின் பின் வைக்கப்பட்டது.

௪-ஆம்-அதி-அறன்வலியுறுத்தல்.

அம்முனிவராலறிவிக்கப்பட்டமூன்றுள் அறமானது-மற்றப்பொருளின்பங்களைப்போலாகாமல, இம்மை - மறுமை- வீடு- என்கிற மூன்றையுந்தருதலால், அவற்றினும் உறுதியுடைத்தென்பது சொல்லுதலால்— அதிகார முறைமையு மிதனால் விளங்கும.

உ - வது, இல்லறவியல்

இல்லறமாவது - இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லப்படுகிற வழியிலேநின்று அதற்குத்துணையாகிய கற்புடையமனைவியோடு கூடிச்செய்யப்படுவதாம்—ஆதலின், அதனை முதலிலே சொல்லத்தொடங்கினார்

---

முதல்-ஆம்-அதி இல்வாழ்க்கை.

(அஃதாவது) மனையாளோடுகூடி வாழ்தலினது சிறப்பு. இல்வாழ்க்கை நிலையானது அறஞ்செய்தற்குரிய இருவகைநிலைகளுள்ளே முதலாதலின்—இது, அறன்வலியுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

உ-ஆம்- அதி-வாழ்க்கைத்துணைநலம்.

அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது நன்மை— இதனாலே அதிகாரமுறைமையும் விளங்கும்.

௩ ஆம்- அதி- புதல்வரைப்பெறுதல்.

முனிவர்கடன் கேள்வியாலும், தேவர்கடன் வேள்வியாலும் தென்புலத்தார்கடன் புதல்வரைப்பெறுதலாலு மல்லது செலுத்தக்கூடாமையால் - அக்கடன்செலுத்தற்பொருட்டு நல்ல மக்களைப் பெறுதல்— அதிகார முறைமையு முன் பெறப்பட்டது.

## ௪-ஆம்-அதி-அன்புடைமை.

அம்மனைவி புதல்வர்முதலாகிய சம்பந்த முடையவரிடத்து ஆசையுடையவனாயிருக்கை—அதிகாரமுறைமையு மிதனு லிளங்கும். [இல்லறமினிது நடத்தலும்,பிறவுயிர்களின்மேல் அருள்பிறத்தலும், அன்பின் பயனாதலால் இதுவேண்டப்பட்டது.]

## ௫-ஆம்- அதி- விருந்தோம்பல்.

விருந்தினரையுபசரித்தல் - தென்புலத்தார் - தெய்வம் - விருந்தினர் - சுற்றத்தார் - தான் - என்கிறஐவகையோரை - உபசரித்தல்களிலே முன்னவையிரண்டும் கண்ணாற் காணப்படாது அவரை நினைத்து செயப்படுவனவாதலாலும் - பின்னவையிரண்டும் - பிறர்க்குக்கொடுத்த லல்லாமையாலும் - நடுநின்ற விருந்தோம்பல் சிறப்பையுடையதாகி - அவ்வில்லங்களுக்கு முதலாயிற்று வேறுபாடில்லாத அன்பையுடைய கணவனும் மனையாளுங்கூடியல்லது - செய்யகூடாமையால் இதுஅன்புடைமையின் பின்வைககப்பட்டது.

## ௬-ஆம்-அதி- இனியவைகூறல்.

மனதிலுள்ள மகிழ்ச்சியை வெளிப் படுத்துகிற - இனிய சொல்லுகளைச்சொல்லுதல்.—இதுவும் - விருந்தோம்புவார்க்கு அவசியம் வேண்டுவதாகலின் அதன்பின்வைக்கப்பட்டது

## ௭-ஆம்- அதி- செய்நன்றியறிதல்.

தனக்குப் பிறர்செய்த நன்றியைமறவாமை. இனியசொற்களைச்சொல்லி இல்லறத்தின் வழுவாதவர்க்கு - நன்றிமறத்தல் தீராக்குற்றமாதலின்,இதனை நீக்குதற்பொருட்டு அதன்பின் வைக்கப்பட்டது

## ௮-ஆம்-அதி-நடுவுநிலைமை.

பகைவர் - அயலோர் - நட்பினர்-இம்மூவகையோரிடத்தும் அறத்தின் வழுவாமல் ஒப்பநிற்கு நிலைமை. இது- நன்றி செய்தவரிடத்து அந்நன்றியை நினைத்தவிடத்தே கெடுமன்றே அவ்விடத்தும் கெடலாகாதென்றற்கு—இதுசெய்நன்றியறிதலின் பின்வைக்கப்பட்டது.

## ௯-ஆம்-அதி- அடக்கமுடைமை.

காயமும் - வாக்கும் - மனமும் - தீயவழியிலேசெல்லாமல் அடங்குதலுடையவனாயிருத்தல்.—இது பிறர்குற்றம்போலக்க

ங் குற்றங்காணும் நடுவுநிலைமையுடையவனுக்கு உரித்தாதலால் அந்நடுவுநிலைமையின் பின்வைக்கப்பட்டது.

௰ ஆம்-அதி- ஒழுக்கமுடைமை

தங்கள் - தங்கள் - வருணாசிரமங்களுக்குச் சொல்லப்பட்ட ஆசாரத்தை யுடையவனாயிருக்கை. இது காமமுதலானவையடங்கினவாலல்லது முடியாதாகலின் — அதன்பின்வைக்கப்பட்

௰௧-ஆம்- அதி- பிறனில்விழையாமை

காமமயக்கத்தாற் - பிறர்மனையாளை விரும்பாமை — இது- ஒழுக்கமுடையவரிடத்தே யுண்டாகுவதாகலின அதன்பின் வைக்கப்பட்டது

௰௨-ஆம்- அதி- பொறையுடைமை.

காரணம்பற்றியாவது - அறியாமையாலாவது - தமக்கிடத் தீங்குசெய்தவிடத்துத் தாமுமதனையவனிடத்திற் செய்யாது பொறுத்தலுடையராதல் — இதுபிறனில விழையாமை போல அவசியம்வேண்டுவதாதலின் - அதன்பின் வைக்கப்பட்டது

௰௩-ஆம்- அதி- அழுக்காறாமை

பிறர்செலவமுதலியவை கண்டவிடத்துப் பொறாமைப்படாமை—இப்பொறாமையும்பொறுமைக்கெதிரியதாதலின் இதனைவிலக்குதற இது பொறையுடைமையின் பின்வைக்கப்பட்டது.

௰௪-ஆம்- அதி - வெஃகாமை.

பிறர்பொருளை வெளவுதற்கு நினையாமை. பிறருடைமை- கண்ட விடத்துப்பொறாமைப்படுதலேயன்றி அதனைத் தான் வெளவுதற்கு நினைத்தலுங்குற்றமென்றற் கிது அதன்பின்வைக்கப்பட்டது.

௰௫-ஆம்- அதி- புறங்கூறாமை.

பிறரைக்காணாவிடத்து இகழ்ந்து பேசாமை. — வாக்கின் குற்றம் - மனக்குற்றத்தின் வழியாகத் தோன்றலால் இது- அழுக்காறாமை வெஃகாமைகளின் பின்வைக்கப்பட்டது.

௰ஏ ஆம்-அதி- பயனிலசொல்லாமை

தமக்காவது- பிறர்க்காவது-அறம்பொருளின்பங்களிலொ ன்றை யேனுந்தராதசொற்களைச்சொல்லாமை பொய்-குறளை- கடுஞ்சொல் - பயனிலசொல் - என - வாக்கினிடத்தேயுண்டா ம் நான்கினுள் - பொய்துறந்தோர்க்கல்லது பற்றறவிடக்கூ டாமையால் - அதனையொழித் தில்வாழ்வாரால் விடக்கூடும மையாகிய மற்றைமூன்றினுள் - கடுஞ்சொல் இனியவைகூற லாலும் - குறளைபுறங்கூறாமையாலும், விலக்கிநின்றபயனில சொலலை இதனால் - விலக்குகின்றமையால் — இதுபுறங்கூறா மையின் பின்வைக்கப்பட்டது.

௰ஐ-ஆம்-அதி-தீவினையச்சம்

பாவங்களாயுள்ளவைகளைச் செய்தற்கு அஞ்சுதல் இதனா ல் - காயத்தினிடத்தே விளைகின்ற பாவங்களையெல்லாந் தொ குத்து விலக்குகின்றமையால— இதுபயனிலசொல்லாமையி ன் - பின்வைக்கப்பட்டது

௰அ-ஆம-அதி-ஒப்புரவறிதல்.

உலகநடையை யறிந்துசெய்தல் (மேலேவாக்குக் - காயங்க ளால் செய்யத்தகாதவைமுன்சொல்லினார்) இனிசெய்யத்த குமவைகளில - முன்சொல்லப்பட்டவற்றுள - அடங்காதவைக ளைச்சொல்லுகின்றார் - ஆகையால் - இது - தீவினையச்சத்தின் பின்வைக்கப்பட்டது.

௰க ஆம்- அதி-ஈகை.

வறியவராய் இரந்தவர்க்கு இலலையென்னமல் - கொடுத்தல் இது - மறுமையைக்குறித்தாகலின்—இம்மையைக்குறித்த- ஒ ப்புரவறிதலின் - பின்வைக்கபபட்டது.

௰ய- ஆம்-அதி-புகழ்

இலவாழ்க்கை முதலீகை யீறாகச்சொலலப்பட்ட - இல்ல

றத்தில் தவறாதவர்க்கு இம்மைப்பயனாகி இவ்வுலகத்திலேசெ ய்தபடியே நிற்பதாகிய - கீர்த்தி — இது - பெரும்பாலும் - ஈகை பற்றிவருதலால் அதன்பின்வைக்கப்பட்டது.

## ரு-ஆவது துறவறவியல்.

துறவறமாவது - முன்சொல்லப்பட்ட இல்லறத்தின்வழுவா தொழுகி அறிவுடையராய்ப்பிறப்பினையஞ்சி முத்திபெறுத ற் பொருட்டுத்துறந்தவர்க்குரித்தாகிய அறமாம் (விரதம்) அ து - விரதம் - ஞானம் - எனவிருவகைப்படும் - விரதமாவது வினைமாசுதீர்ந்து அந்தக்கரணங்கள் பரிசுத்தமாதற்பொருட் டு - இன்னஅறங்களைச்செய்வேனென்றும் - இன்னபாவங்களை விடுவேனென்றும் - தமதுவல்லமைக்கேற்க - அளவுசெய்து கொண்டு - துறந்தோராலே - காப்பாற்றப்படுவது - அவ்விர தங்கள் - அளவிலவாயினும், அவைபலவற்றையுந்தமமுளடக் கிநிற்குஞ் சிறப்புடையசிலவற்றையிங்கே சொல்லத்தொடங் கி முதலிலே - அருளுடைமையைச் சொல்லுகின்றார்.

### முதல்-ஆம் அதி - அருளுடைமை

தொடர்பு - பற்றுமல் இயல்பாக - எல்லாவுயிர்களின்மேலு ஞ்செல்வதாகிய கருணையையுடையராதல் - இல்லறத்துக்கு அ ன்புடைமைபோல் — இது - துறவறத்துக்குச்-சிறத்தலால்-மு ன்வைக்கப்பட்டது.

### உ-ஆம்-அதி-புலான்மறுத்தல்.

ஊனுண்ணுதலை யொழித்தல்- இது - கொலைப்பாவத்தை ப்பின் உண்டாக்கலால் அதற்குக்காரணமாதலையும், முன்னும ஈனுல் வருதலால் அதன்காரியமாதலையும், ஒருசேரஉடைத்தா கிய ஊனுணணுதல் அருளுடையார்கடிையவதன்முகலின்அ தனைவிலக்குதற்கு - அருளுடைமையின்பின்வைக்கப்பட்டது

### ரு-ஆம்-அதி-தவம்.

மனம் - பொறிவழிசெல்லாது நிற்றற்குவிரதங்களினாலே· உண்டிசுருங்குதல முதலானசெயல்களை மேற்கொண்டு அவை

களாற்றப்படுமுயிர்க்குறுந் துன்பங்களைப் பொறுத்தலும், பிற
கலைக்காப்பாற்றல் - புலாலைமறுத் துயிர்கண்மேலருண்முதிர்ந்
த விடத்தேசெய்யப்படுவதாகலின் - ஈதன்பின்வைக்கப்ப
ட்டது

௪-ஆம்-அதி-கூடாவொழுக்கம்

(தாம்) விட்டகாமவின்பத்தை உறுதியில்லாமையாலே பின்
னும் விரும்புமவழிதோன்ற அவ்வழியேகொண்டுநின்று, தவ
த்தோடு பொருந்தாதாகிய தீயவொழுக்கம் — ஆதலினிது
வத்தின் - பின்வைக்கப்பட்டது

௫-ஆம்-அதி கள்ளாமை

பிறருடைமையாயுள்ளவைகளில் யாதொருபொருளையும் அ
வரைவஞ்சித்துக்கொள்ள நினையாமை நினைத்தலுஞ்செய்தற்குச்
சமானமாதலால் கள்ளாமையெனலாயிற்று இல்லறத்தாருக்
குத் தமமனோடுவிளையாட்டாக வாவதுசெய்யக்கூடும் - து
றவறத்தாருக்கு நினைத்தவிடத்தும் பெரியகுற்றமாதலின் புற
த்திலே போகாமல்மடங்கி ஓரிடத்தையுற்று உயிரைநோக்க
வேண்டியதாகிய அவசதுமனம் அதைவிட்டுப்புறத்திலேபோ
ய்ப் பலவிடத்தையுற்று உடம்பின்பொருட்டுப்பொருளைநோ
க்குதலல்லாமலும், அப்பொருளையும் வஞ்சித்துக்கொள்ள நி
னைத்தல் அவருக்குப்பெரியகுற்றமாதலறிக இவ்விதமவாய்
மைமுதற்கொல்லாமை முடிவாகிய நான்கதிகாரத்திற்கும் ஒக்
கும்— இது பொருளைப்பற்றி யுண்டாங் குற்றத்தை விலக்குவ
தாகலின் காமம்பற்றியுண்டாங்கூடாவொழுக்கத்தின் பின்வை
க்கப்பட்டது.

௬-ஆம்-அதி-வாய்மை.

மெய்யினது தன்மை-பெரும்பாலும், காமமும் பொருளும்
பற்றி யுண்டாவதாகிய பொய்ம்மையை விலக்கலால் — இது- கூ
டாவொழுக்கங்கள்ளாமைகளின் பின்வைக்கப்பட்டது.

௭-ஆம்-அதி-வெகுளாமை.

கோபஞ்செய்தற்குக் காரணமாகிய குற்றம் ஒருவனிடத்தே

புண்டாகிய விடத்தும், கோபஞ்செய்யாமை.—இது பொறுமையற்றி யுண்டாங்கோபத்தை விலக்கலால் வாய்மையின்பின் வைக்கப்பட்டது.

அ ஆம்-அதி-இன்னாசெய்யாமை.

தனக்கொருபயனைக்குறித்தாவது வைரம்பற்றியாவது ஒருயிர்க்குத் துன்பந்தருமவைகளைச்செய்யாமை அவைகளைச்செய்தல்வெகுளியொழியவும் உண்டாமென்பதையறிவித்தற்கு— இதுவெகுளாமையின் பின்வைக்கப்பட்டது.

கூ-ஆம்-அதி-கொல்லாமை

ஐயறிவுடையவைமுதல ஓரறிவுடையவை கடையாகிய உயிர்களை சோர்விறுலுங்கொல்லுதல் செய்யாமை இதுமுன் சொல்லப்பட்ட அறங்களெல்லாவற்றினுஞ்சிறப்புடைத்தாய்ச் சொல்லாது ஒழிந்தமற்றையவறங்களையெல்லாம தன்னுளடக்கி நிற்கையால் --இறுதியில்வைக்கப்பட்டது

## ஞானம்.

ஞானமாவது அவ்விரதங்களினாலே கரணங்கள் பரிசுத்தமானவிடத்துஉண்டாவதும், மோட்சத்தைத்தருவதுமாகிய அறிவு-அது நிலையாமைமுதல் அவாவறுத்தல் இறுதியாக நான்கதிகாரத்துளடக்கிச்சொல்லப்படுகின்றது

ய ஆம்-அதி-நிலையாமை.

தோற்றமுடையவையெல்லாம நிலைபெறாததன்மை. இது அறிந்தவிடத்தே யல்லாமற்பொருள்களிலே பற்றுவிடாதாகலின முன்வைக்கப்பட்டது

யக-ஆம்-அதி-துறவு

புறமாகியசெல்வத்திலும், அகமாகிய உடம்பிலும், உண்டாகியபற்றை அவைகளது நிலையாமையைப்பார்த்துவிடுதல், அதிகாரம்வைத்தமுறையையும் இதனால்விளங்கும்.

௩௨-ஆம்-அதி-மெய்யுணர்தல்.

பிப் புவிமேகளையும், அவற்றின் காரணங்களையும்,
‡ விபரீத * சந்தேகங்களால் அல்லாமல் உண்மையால்
அறிதல் — இதை வடநூலார் தத்துவஞாந மென்பர். —
இதுவும் பற்றற்றான் பற்றினைப் பற்றியவிடத்தே யுண்டாவ
தாகையால் அக்காரண வொற்றுமைபற்றி துறவின்பின் வைக
கப்பட்டது.

‡ விபரீதஞாநமாவது ஒன்றை மற்றொன்றாக வறிதல்-
அது கயிற்றைப் பாம்பென்றறிதல் போல்வன.

* சந்தேகஞாநமாவது ஒன்றை இதுவோ அதுவோ வெ
னக்கொள்ளுதல்.
அது கயிறோ பாம்போவெனத் துணியாது நிற்பது போல்வன.

௩௩- ஆம்-அதி-அவாவறுத்தல்.

மூன்றும் பின்னும் வினைத்தொடர்பறுத்தார்க்குநடுநின்ற
வுடம்பும் அதுகொண்டவினைப்பயன்களும நின்றமையால்அ
துபற்றி ஒரோவிடத்துத்துறக்கப்பட்டபுலன்களின் மேலே ப
ழைய பழக்கவசத்தினாலே நினைவுசெல்லுமன்றே அந்நினைவு
ம் பிறவிக்குவித்தாமாகலாலதனை இடைவிடாதமெய்ப்பொரு
ளுணர்வால்அறுத்தல்—அதிகாரமுறைமையுமிதனால்விளங்கும்.

௩௪-ஆம்-அதி-இயல்-ஊழ்

நல்வினைப்பயனாகியஇன்பமும், தீவினைப்பயனாகிய துன்
பமும், அவ்வினைகளைச்செய்தவனையே சென்றடைவதற்கேது
வாகியநியதி. (ஊழ்-பால்-முறை - உண்மை-தெய்வம் நியதி-
விதி - என்பனவைஒருபொருட்சொற்கள்) இதுபொருள் இன்
பங்கள் இரண்டற்கும்பொதுவாய்நின்றதுள்வைக்கப்படாமை
யானும், சொல்லப்பட்டஅறத்தோடு சம்பந்த முடைமையா
னும், அதனிறுதியில்சொல்லப்பட்டது

ஆக-அதிகாரம்-௩௪.



அறத்துப்பால்.

முற்றிற்று.



உ

சிவமயம்.

நாயனார் துணை

இரண்டாவது

# பொருட்பால்.

திருவள்ளுவமாலையுள் - தொடித்தலைவிழுத்தண்டினார்
இயற்றிய - இயற்றொகை

வெண்பா

அறநான்கறிபொருளேழொன்றுகாமத் *
திறமூன்றெனப்பகுதிசெய்து-பெறலரிய .. *
நாலுமொழிந்தபெருநாவலரோநன்குணர்வார் . *
போலுமொழிந்தபொருள் ... ... *

திருவள்ளுவமாலையுள்போக்கியார்அருளியபொருட்பால்
அதிகாரத்தொகை.

வெண்பா

அரசியலையைந்-தமைச்சியலீரைந் . . *
தருவலரணிரண்டொன்றெண்கூ-ழிருவிய *
திணைபடைநட்புப்பதினேழ்குடியதின்மூன் *
றெண்பொருளேழாமிவை .. ... ... *

*——*——*

## முதலாவது - அரசியல்.

### முதல் ஆம்-அதி- இறைமாட்சி.

(அஃதாவது) அரசனது நற்குண நற்செய்கைகள்

### உ-ஆம்-அதி-கல்வி.

(அவ்வரசன்) கற்றற்குரிய நூல்களைக்கற்றல். அவையாவன- அறநூல் - நீதிநூல் - (தேர்-யானை-குதிரை-படைக்கலம்) எனப் பட்ட இவற்றினூல்களும்.

௩-ஆம்-அதி-கல்லாமை.

கற்றலைச்செய்யாமையின்இழிவு. முற்கூறியகல்வியின் சிறப்புமுடிவுபெறுமைநோக்கி எதிர்மறையாலும், கூறலாகிய கல்லாமையை அதன்பின்வைக்கப்பட்டது

௪-ஆம்-அதி-கேள்வி

கேட்கத்தகுநூலின்பொருள்களைக் கற்றறிந்தவர் சொல்லக்கேட்குதல் கற்றவிடத்தே அதனுலாகிய அறிவை யுறுதிப்படுத்தலாலும், கல்லாதவிடத்தும் அதனையுண்டாக்கலாலும், இது கல்வி - கல்லாமைகளின் பின்வைக்கப்பட்டது.

௫-ஆம்-அதி-அறிவுடைமை

கல்வி கேள்விகளினுலாகிய அறிவோடு உண்மையறிவுடையனுதல். அதிகாரமுறைமையும் இதனுலவிளங்கும்.

௬-ஆம-அதி-குற்றங்கடிதல்

காமம் - குரோதம் - உலோபம் - மானம் - உவகை- மதம்- (என்னப்பட்ட ஆறுகுற்றங்களையும் அரசன்தன்னிடத்தேதோன்றுமல்கடிதல —இவைகளைக குற்றமென்றறிதலும் கடிதலும் அறிவுடையாாககலலது மற்றையர்க்குக்கூடாமையால, ஈது அதன்பின் வைககப்பட்டது.

௭-ஆம்-அதி-பெரியாரைததுணைககோடல

(அவவறுவகைக குற்றங்களையுங்கடிந்த அரசனதன்னைதீய வழியில்விலக்கி நல்வழியிற் செலுத்துவ) (பேரறிவுடையவரைததனககுத்துணையாக்கிக்கொள்ளுதல். அதிகாரமுறைமையும இதனுல்விளங்கும். [பேரறிவுடையார் அரசாட்சிககுக்குற்றம்வராமற் காத்தற்குரிய- அமைச்சர் -புரோகிதர ]

௮ ஆம-அதி-சிற்றினஞ்சேராமை

சிறியவினத்தைப்பொருந்தாமை சிறியவினமானது -நல்லதிலேநன்மையுந் தீயதில தீமையுமில்லையென்பாரும், விடருமதூர்த்தரும முதலானகூட்டம். அறிவை வேறுபடுத்தி இருமையுங்கெடுக்குஞ்சிற்றினமாகிய இதனைப்பொருந்தினுல், பெரியாரைத்துணைக்கோடல், பயனிலலையென்பதறிவித்தற்கு ஈததன்பின் வைககப்பட்டது.

கூ-ஆம்-அதி-தெரிந்துசெயல்வகை.

அரசன் தான்செய்யுந்தொழில்களை ஆராய்ந்துசெய்யுந்திறம். அச்செயல் - பெரியோரைத்துணைகோடல் - பயனுடைத்தாயவிடத்து அவருடன் செய்யப்படுவதாகலின்— இதுசிற்றினஞ்சேராமையின் பின்வைக்கப்பட்டது.

டு-ஆம்-அதி-வலியறிதல்.

(அவ்வுபாயங்களுள் - தண்டஞ்செயக்குறித்த அரசனவன்) வினைவலி - தன்வலி - மாற்றான்வலி - துணைவலி-என்னும் நால்வகை வலிவைகளையும், அளந்துஅறிதல் அதிகாரமுறைமையும் இதனால்விளங்கும்.

டுக-ஆம்-அதி-காலமறிதல்

வலிமையினாலே மிகுதியுடையவனாயப்பகைவன்மேற்போர்க்குச்செல்லுமரசன்ஏற்றகாலத்தினையறிதல். அதிகாரமுறைமையும் இதனால்விளங்கும்.

டுஉ-ஆம்-அதி-இடனறிதல்.

வலியுங்காலமுமறிந்து பகைமேற்செல்வோன்தான்வெல்லுதற்கேற்ற நிலத்தினையறிதல். அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும்.

டுங-ஆம்-அதி-தெரிந்துதெளிதல்.

(மந்திரிமுதலானவர்களைப் - பிறப்பு - குணம் - அறிவு -என்பபடுகின்றவைகளையும், செய்கையையும், காட்சி-கருத்து-ஆகமம் - என்கின்றபிரமாணங்களினாலே ஆராய்ந்து தெளிதல் வலிமுதலாகிய மூன்றையுமறிந்து பகைமேற்செல்வோனுக்குச்சேனைகருத்தோடு தொழில்செய்தற்கும, எதிரிடாமைக்கும் - இததெளிவுவேண்டுதலால் அவைகளின்பின் வைக்கப்பட்டது.

(௫௪-ஆம்-அதி-தெரிந்துவினையாடல்)

அத்தெளியப்பட்டவரை அவர்செய்யவல்ல தொழில்களை யறிந்து அவைகளிலே ஆளுந்திறம். அதிகாரமுறைமையுமிதனாலறியலாம்.

(௫௫-ஆம்-அதி-சுற்றந்தழால்)

அரசன் தனது சுற்றத்தாரைத் தன்னை விட்டு நீங்காதிருக்கும்படித் தழுவுதல் [தொழில்செய்வாரைச்சொல்லி மற்றைச்சுற்றத்தாரைச்சொல்லுதலால் இது தெரிந்துவினையாடலின் பின்வைக்கப்பட்டது

(௫௬-ஆம்-அதி-பொச்சாவாமை)

அழகு செல்வம் ஆற்றல் முதலானவைகளால் மகிழ்ந்து தன்னைக்காத்துக்கொள்ளுதலிலும், பகையழித்தல் முதலாகிய காரியங்களிலும், மறதிசெய்யாமை முன்சொல்லப்பட்ட சுற்றத்தாரால் பயனுள்ளது இம்மறதியில்லாவிடத்தாதலால் இது சுற்றந்தழாலின்பின்வைக்கப்பட்டது

(௫௭ ஆம்-அதி- செங்கோன்மை)

அரசனாற்செய்யப்படுமுறையினது தன்மை அந்தமுறையானது ஒருபக்கத்திலே சாயாமல செவ்வையாகிய கோல்போலுதலாலே செங்கோலெனப்பட்டது அது மறதியிலலாத அரசனாற் செய்யத்தக்கதாதலா லிது பொச்சாவாமையின் பின்வைக்கப்பட்டது

(௫௮ ஆம்-அதி-கொடுங்கோன்மை)

அம்முறையினது கோணுதற்றன்மை இது செங்கோன்மைக்குமாறாதலால் அதன்பின்வைக்கப்பட்டது

(௫௯ ஆம்-அதி வெருவந்தசெய்யாமை)

குடிகள் அஞ்சுவதும், பகுதியென்று சொல்லப்படுகிற மந்திரிமுதலாகிய அங்கங்கள் அஞ்சுவதும், தானஞ்சுவதுமாகிய தொழில்களைச்செய்யாமை, அவைசெய்தல் கொடுங்கோன்மையிலேசேர்தலால் அதன்பின்வைக்கப்பட்டது

(௬௦-ஆம்-அதி-கண்ணோட்டம்)

தன் நெடுபழகினவரைக்கண்டால், அவராலே சொல்லப்பட்டதனை மறுக்கமாட்டாமை இது அவர்மேலே கண்சென்றவிடத்து

து நிகழ்வதாகலால் அப்பெயர்பெற்றது [தாக்ஷிண்ணியம் முகம்பொழித்தல் என்று சொல்லப்பட்டது]

(௨௧-ஆம்-அதி-ஒற்றாடல்)

பகைவர்-அயலோர் நட்பினர் என்னுமூன்று திறத்தாரிடத்தும் நிகழ்ந்தவையறிதற்கு ஒற்றனாலாகுதலின் முன்சொல்லப்பட்ட இலக்ஷணமுடைய அரசனுக்குத் தன்னாடுகாக்கும்போதும் பிறநாடுபிடிக்கும்போதும் வேண்டுமவைகளைச்சொல்லத் தொடங்கினாராதலால் அவ்விரண்டுகாரியங்களுக்கும் அவசியமாய் வேண்டுவதாகிய இது முன்னேவைக்கப்பட்டது

(௨௨-ஆம்-அதி ஊக்கமுடைமை)

மனமானது தொழில்செய்தலிலே எழுச்சியையுடைத்தாதல் ஒற்றால் நடந்தவையறிந்து அவைகளுக்கேற்ற தொழில் செய்வோனுக்கு இது அவசியம்வேண்டுதலால் அதன்பின் வைக்கப்பட்டது

(௨௩-ஆம்-அதி மடியின்மை)

நினைக்கப்பட்டவைகளைச்செய்யும்போது சோம்புதல் இல்லாமை ஊக்கமுடையவருக்கு ஒரோவிடத்தே குணவசத்தாற் சோம்பல்வருதலைக்குறித்து இது அதன்பின்வைக்கப்பட்டது

(௨௪-ஆம்-அதி- ஆள்வினையுடைமை)

இடைவிடாதமெய்முயற்சியை உடையனாதல் அது ஆளும்வினையெனக்காரியத்தாற் சொல்லப்பட்டது சோம்பலைக்கெடுத்தலும், தொழிலை முயற்சியில்லாமல் ஆளக்கூடாமையினாலே இது மடியின்மையின் பின்வைக்கப்பட்டது

(௨௫-ஆம்-அதி இடுக்கணழியாமை)

தொழிலிலேமுயல்பவன் ஊழினாலாவது, பொருளில்லாமையினாலாவது, மெய்வருத்தத்தினாலாவது, தனக்குத் துன்பம் வந்தவிடத்து அதற்கு மனங்கலங்காமை. அதிகாரமுறைமையு மிதனால்விளங்கும்



## இரண்டாவது—அங்கவியல்.

இது "இராசாங்கம்" அஃதாவது அமைச்சு- அரண்- கூழ் படை நட்பு- குடி ஆகிய (அரசருக்குரிய) அங்கம் (சா) அவையுள்

### முதல்- அங்கம்- அமைச்சியல்

(க-ஆம்-அதி அமைச்சு)

அமைச்சனது தன்மை. அத்தன்மை அவன் குணங்களும், செய்கைகளும்

(உ-ஆம்-அதி-சொல்வன்மை)

தான் நினைத்ததொழின்முடியும்வழியால் வார்த்தைசொல்லவல்லவனாதல் முன்னதிகாரத்திலே ஒருதலையாச் சொல்லுமென்றதையே சிறப்புப்பற்றிவிரித்துச்சொல்லுதலால் அதனபின் வைக்கப்பட்டது

(ங-ஆம்-அதி-வினைத்தூய்மை)

செய்யப்படுந்தொழில்கள் பொருளைமாத்திரமல்லாமல் அறமும் புகழுந்தந்து நல்லவையாதல். சொல்லேயல்லாமற் செயலும் நன்றாகவேண்டுமென்கின்றமையால் ஈததன்பின்வைக்கப்பட்டது

(ச ஆம்-அதி- வினைத்திட்பம்)

அப்பரிசுத்தமாகிய தொழிலை முடிப்பவனுக்குவேண்டுவதாகிய மனவலிமை அதிகாரமுறைமையுமிதனால்விளங்கும்

[ரு-ஆம்-அதி வினைச்செயல்வகை)

அவ்வலிமையுடைய மந்திரியானவன் அதுதொழிலைச்செய்யுந்திறம் அதிகாரமுறைமையும் இதனால்விளங்கும்

(சா-ஆம்-அதி தூது)

பொருத்தல் பிரித்தல் களுக்கு வேற்றரசரிடத்துச்செல்லுவாரதுதன்மை அவ்விரண்டனையும், முன் செயல்வகையென்றமையால் ஈததன்பின்வைக்கப்பட்டது—[தான் வகுத்துச்சொல்வோன், சொல்லியதுசொல்வோன், எனத் தூது இருவகைப்படும் அவருள் - முன்னோன் மந்திரியோடு சமானனுவானாதலாலும், பின்னோன் - அவனிலெல்காற்பங்கு குணங்குறைந்தோனாதலாலும்- இஃது அமைச்சியலுள்வைக்கப்பட்டது]

(௭ ஆம்-அதி- மன்னரைச்சேர்ந்தொழுகல்)

மந்திரியரசனைப்பொருந்திநடக்கும்விதம்— இது "வேந்தமைச்சின் வினைபண்புடைமை" எனமுன்சொல்லப்பட்டமையால் அதின்பின் வைக்கப்பட்டது.

(அ-ஆம்-அதி குறிப்பறிதல்)

அரசர்நினைத்ததை அவர்சொல்லாமலறிதல்— இவைமன்னரைச்சேர்ந்து நடப்பவர்க்கு அவசியமானதாகலால் அதன்பின் வைக்கப்பட்டது

(௯-ஆம்-அதி-அவையறிதல்)

அரசனோடிருந்த சபையியல்பையறிதல்—காரியஞ்சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலேயல்லாமல் இதுவுமவேண்டுதலால் அதன்பின் வைக்கப்பட்டது

(ய-ஆம்-அதி-அவையஞ்சாமை)

சொல்லுதற்குரிய சபையறிந்து சொல்லுங்கால் அதற்கு அஞ்சாமை—அதிகாரமுறைமையுமிதனுல் விளங்கும

—※—

இரண்டாம்- அங்கம் அரண் இயல்

(முதல்-ஆம்-அதி_நாடு)

அவ்வரசனாலும், மந்திரியராலும், கொண்டுசெலுத்தப்படுவதும் மற்றை அரணுமுதலிய அங்கங்களுக்கு அவசியமவேண்டுவதும் ஆகியது—அதிகாரமுறைமையுமிதனுல்விளங்கும்

(உ-ஆம்-அதி-அரண்)

இனி (அந்நாட்டிற் குறப்பா யடங்குமாயினும்) பகைவராற்றெலைவுவந்தவிடத்து அதற்கும் அரசனுக்குங் காப்பாதற் சிறப்புப்பற்றியே வேறோர் அங்கமாகச் சொல்லப்பட்டது — அதிகாரமுறைமையு மிதனுல் விளங்கும்

மூன்றாம்-அங்கம்-கூழ்-இயல்

(க-ஆம்-அதி-பொருள்செயல்வகை)

பெரும்பாலும்-நாட்டாலும்-அரணாலும்-வளர்க்கவுங் காக்கவும் படுவதாகிய பொருள்சம்பாதித்தலின்விதம் (அதிகாரமுறைமையுமிதனுல்விளங்கும)

நான்காம்- அங்கப் படை இயல்

முதல்- ஆம் - அதிகாரம்- படைமாட்சி

சேனையினது தன்மை அதிகாரமுறைமையுமிதனால் விளங்கும [மூலப்படை - கூலிப்படை - நாட்டுப் படை - காட்டுப்படை - துணைப்படை - பகைப்படை - என்று அறுவகைப் படையுள்ளுஞ்சிறந்தது - மூலப்படை]

உ- ஆம்-அதி-படைச்செருக்கு

அச்சேனையினது மறமிகுதி மறமிகுதியென்பது வீரமுஞ் சௌரிய பராக்கிரமம அதிகாரமுறைமையுமிதனாலவிளங்கும

ஐந்தாம்-அங்கம்-நட்பு இயல்

முதல்- ஆம அதிகாரம்- நட்பு

சிநேகம் இது, இயற்கை- செயற்கை-என இருவகைப்படும் அவைகளில் இயற்கை நட்புபிறப்புமுறைமையாலாகியதும் செயற்கை முறைமையாலாகியதும எனவிருவகைப்படும் அவைகளுள் முன்னையது சுற்றம் ஆதலால்சுற்றந்தழாலிலடங்கிற்று மற்றது பகையிடையிட்டதேயாதலால துணைவலி என்பதில் அடங்கிற்று (இனி இவ்வதிகாரம முன்செய்தவுதவி பெற்றாரொடு உளதாகிய செயற்கை நட்பேயாதலால்' அதன் சிறப்பு இங்குச் சொல்லப்பட்டது

உ-ஆம் அதி-நட்பாராய்தல்

முன்சொல்லப்பட்ட இலக்கணமுடையவரை ஆராய்ந்தே சிநேகிக்கவேண்டுதலால், அவரை ஆராயுந்திறம் அதிகாரமுறைமையுமிதனால் விளங்கும

ஈ ஆம்-அதி-பழமை

விதிமுகநட்பு நட்பினராது பழையராந்தன்மை பார்த்து அவர்செய்தபிழைகளைப்பொறுத்தல் ஆராய்ந்து சிநேகிக்கப்பட்டாராயினும் பொறுக்கப்படுங் குற்றமுடையராதலாலும ஊழ்வகையாலும நட்புகொள்ளப்பட்டவரிடத்துப்பிழையுளதாமென்பதறிவித்தற்கு இது நட்பாராய்தலின் பின்வைக்கப் பட்டது

௪-ஆம்-அதி-தீநட்பு

தீக்குணத்தாரோடு உண்டாகிய நட்பு பொறுக்கப்படாத குற்றமுடைமையாலவிடத்தக்கதாகிய நட்பு நட்பாராய்...

காரத்திற் சுருங்கச்சொல்லி அவ்வளவிலடங்காமையால் அதனை இருவகைப்படுத்தி இரண்டதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி முன்னை தீநட்புச்சொல்லுகின்றார்.

௫-ஆம்-அதி-கூடாநட்பு.

பகைமைபால உள்ளேகூடாதிருந் தேசமையங்கிடைக்குமளவும் புறத்திலேகூடி நடப்பவர்நட்பு.

௬-ஆம்-அதி-பேதைமை

யாதொன்றும் அறியாமை. [இனி அந்நட்பை எதிர்மறுத்துப் பகைமுகத்தாலே சொல்லத்தொடங்கினார் அப்பகைதான் முழுவதும் விடலாகாதகுற்றமாகிய குரோதத்தாலும் காமத்தாலும்வருவதாம். அவைகளுள் குரோதத்தால்வருபவைஐந்ததிகாரத்தாலும், காமத்தால்வருபவைஐந்ததிகாரத்தாலும், சொல்லுவதற்கு அவ்விரண்டுக்கும் அடியாகிய மயக்கத்தை -பேதைமை - புல்லறிவாண்மை- என இருவகைப்படுத்தி, இரண்டதிகாரத்தாலே சொலலத்தொடங்கி முதலிலே - பேதைமை சொல்லுகின்றார்.]

ஆம்-அதி-புல்லறிவாண்மை.

புல்லியஅறிவை ஆளுந்தன்மை அஃதாவது தான்சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவனாகமதித்து உயர்ந்தோராற்சொல்லப்படும் உறுதிச்சொல்லைக் கொள்ளாமை.

௮-ஆம்-அதி-இகல்.

இருவர்தம்முள்ளே போர்செய்து வலிமை தொலைத்தற்கேதுவாகியமாறுபாடு பேதைமைபுல்லறிவாண்மைகளால் வருங்குரோதகாமங்களுள் அரசர்க்குக்குரோதம் அதிகமாயுள்ளதாகலால் அதனால் வருமவைகளைச் சொல்லத்தொடங்கி முதலிலே இகல சொலலுகின்றார்.

௯-ஆம்-அதி-பகைமாட்சி

அறிவில்லாமை முதலாகிய குற்றங்களுடைமையாக பகைமைமாட்சிமைப் படுத்தல், அரசர்க்கெவ்வழியாலும் பகையில்லாமை கூடாமையால் மேலேபொதுவகையால் விலக்கப்பட்ட இகலை இவ்விடத்தே சிறப்புவகையால்விதிக்கின்றாராதலால் இது அதன்பின்வைக்கப்பட்டது.

௰-ஆம்-அதி பகைத்திறந்தெரிதல்.

மாட்சிமைப்படாதபகையை, ஆகுதற்குற்றமும், முன்னாய்நின்றபகையுள்நட்பாகுந் தன்மையதும அயலாக்குந்த

ன்மைபதும், அவைகளிலே செய்வதும், மற்றைககளையுந்தன்மையதும், அதனிடத்திலேசெய்வனவும், பகையும் பருவமும், களையாமற்போனால் படுமிழுக்கமும், என்று இவவிதங்களை, ஆராய்தல் இவையெல்லாம் மாட்சிமைப் படாத பகையினவாகலால் இது பகைமாட்சியின் பின்வைக்கப்பட்டது.

௰௧- ஆம்-அதி- உட்பகை

புறப்பகைக்கிடமாக்கிக கொடுத்து அதுவெல்லுமளவும் உள்ளாய் நிற்கும்பகை. இதுவுங்களையப்படுவதிலே சேர்ந்ததாகலால் அதன்பின் வைக்கப்பட்டது

௰௨- ஆம்- அதி- பெரியாரைப்பிழையாமை.

பெரியாரை அவமதித்துநடவாமை இதுகுரோததால் வருமவைகளின் முடிவில்வைக்கப்பட்டது

௰௩- ஆம்- அதி- பெண்வழிசசேறல்.

தன்வழிநடத்தற்குரியவளாகிய மனையவள் வழியேதான் நடத்தல் இனி காமத்தால் வருபவைநேரேபகையலலவாயினும் பெருககஞ்சிதைத்தல் அழிவைத்தருதல் என்கின்றதொழில்களாலேபகையோடொத்தலால் அவைகளைப் பகைப்பகுதியின் முடிவிலே சொல்லதொடங்கி முதலிலேபெண்வழிச்சேறல் சொல்லுகின்றார.

௰௪- ஆம்-அதி- வரைவின்மகளிர்.

தந்நலம் விலைகொடுப்பர்யாவர்க்கும் விற்பதலலது அகற்குஆவார்ஆகாதார் என்கின்றவரைவு இலலாதமகளிரது இயல்புஆகலால் இது தமக்குரியமகளிரால வருங்குற்றத்தின் பின் வைக்கப்பட்டது.

௰௫- ஆம்- அதி- கள்ளுண்ணாமை

ஒழுக்கமும் உணர்வுமழித்தலில் பரத்தையரோடொப் பதாகியகள்ளினையுண்ணாமை அதுசிறப்பு எதிர்மறைமுகத்தாலே சொல்லுகிறார்.

௰௬- ஆம்- அதி- சூது.

அறம்பொரு ளின்பங்களுக்குத்தடையாகிய சூதாடல். இச்சூதாடலும் பிணியனுபவித்தலுஞ் சொல்லத்தொடங்கி முதலிலே சூதின தியல்புசொல்லுகின்றார்.

௰௭ ஆம்- அதி- மருந்து

பழவினையாலுங் காரணங்களாலு மனிதர்க்குவரும் பிணி
களுள்பழவினையால்வருவன அவ்வினை கழியும்போதலலாற்றீ
ராமையாலவையொழிதது மற்றைக்காரணங்களால் வருமவைவ
தீர்க்குமருந்தின்றிறம். காரணங்களாவன உணவுதொழில்களி
னது ஒவ்வாமை

ஆறாம்அங்கம் குடிஇயல்

இதுவே "ஒழிபியல,, எனப்பட்டது. (அரசியல்முதல்-மற்
றைத் தங்கவியல்களினு மடங்காதொழிந்தவையாவும-இதனுள
விரித்தலால்) இது ஒழிபியல் எனப்பெயராயிற்று

முதல்- ஆம்- அதிகாரம்- குடிமை

உயர்ந்தகுடியினிடத்துப் பிறந்தவரதுதன்மை உயர்குடி
ப்பிறப்பு நாலவகைவருணத்தார்க்கும் அவசியம வேணடியதா
கலால அச்சிறப்புப்பற்றி முனவைககபபடடது

௨- ஆம- அதி- மானம

எந்நாளுந் தன்னிலையிலேதாழாமையும ஊழால் தாழ்வு
வந்த விடத்து உயிர்வாழாமையுமாம ( இது அக்குடிப்பிறப்
பை அழியாமல நிறுத்துதலாலே அச்சிறப்புப்பற்றி அதனபி
னவைக்கப்படடது)

௩ ஆம்-அதி-பெருமை

செய்தற்கரியசெய்தல் செருக்கிலலாமை பிறர்குற்றஞ்
சொல்லாமை என்றிவைமுதலிய நற்குணஙகளாலே பெரியரா
யினோரதுதன்மையாம (நிலையிலிருந்துமேலுமேலு முயாத்
துவதாகிய விகதணஙகளுண்டாவது நிலையிலிருந்து தாழா
மையுள்ளவிடத்தேயாகலால் இது மானத்தின் பினவைககப்ப
டடது )

௪- ஆம்- அதி- சான்றாண்மை

பலகுணங்களாலுநிறைந்து அவைகளை ஆளுகற்றன்மை
பெருமையு ளடங்காத பலகுணங்களையுந் தொகுததுககொண
டு நிறகையால் இது அதனபின்வைககப்பட்டது.

௫ ஆம்- அதி- பண்புடைமை

பெருமைசான்றாண்மைகளில் காமவமுவாதுநின்றே எ
ல்லாரியலபுகளும அறிந்துநடத்தலுடையராதல் அதிகாரமு
றைமையு மிதனாலவிளங்கும-

௬-ஆம்-அதி-நன்றியிற்செல்வம்

சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் - பயன்படுதலில்லாத செல்வத்தினியல்பு - செல்வமுடையானது குற்றஞ் செல்வத்தின்மேலேற்றப்பட்டது.

௭-ஆம்-அதி-நாணுடைமை.

முன்சொல்லப்பட்ட சார்பு - பண்புமுதலிய குணங்களாலுயர்ந்தோர் - தமக்குத் தகாதகருமங்களில் - நாணுதலுடையராதன்மை - அதிகாரமுறைமையும் இதனால்விளங்கும்

௮-ஆம்-அதி-குடிசெயல் வகை

ஒருவன் தான்பிறந்த குடியை உயரச்செய்தலின் விதம் இது தாழ்வினிடத்து நாணுடையவர்க் குண்டாகுவதாகலின் அதன்பின் வைக்கப்பட்டது

௯-ஆம்-அதி-உழவு

சிறுபான்மை - வாணிகர்க்கும், பெரும்பான்மை - வேளாளர்க்கும், உரித்தாகிய உழுதற் றொழில்.—இதுசெய்விக்கும்போது மற்றவர்க்கு முரித்தாகும் இது-முன்னே குடி உயர்தற்கேதுவென்ற முயற்சியாகலால், குடிசெயல்வகையின்பின் வைக்கப்பட்டது

௰-ஆம்-அதி-நல்குரவு.

அனுபவிக்கப்படுவன யாவுமில்லாமை அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும்

௰௧-ஆம்-அதி-இரவு.

மானங்கெடாத [illegible] - [illegible] மானங்கெடாத விரத்தவிரவாமையோடொத்தலால், [illegible] வீடுபெறுவதற் குதவிசெய்வதாகிய [illegible] காக்கலாமென்கிற அறநூல்வழக்குப்பற்றி முன் [illegible] லென்ற இறத்தலைவிலக்குதற்பொருட்டு [illegible]. அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும்.

௰௨-ஆம்-அதி-இரவச்சம்

மானங்கெடவரு மிரத்தலுக்கு அஞ்சுதல். அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும்.

## ௱௮-ஆம்-அதி-கயமை.

கீழோரது தன்மை *(முன்னே) அரசியலுள்ளும், மற்றை அங்கவியலுள்ளும், சிறப்புவகையாற் சொல்லப்பட்ட குணங்களுள் ஏற்புடையவைகளை குறிப்பினால் யாவர்க்கும் பொருந்த வைத்தமையால் அங்கே குறிப்பாற் சொல்லியவையும், இங்கே ஒழிபியலுள் வெளிப்படச்சொல்லியவையும், ஆகிய குணங்களுள் யாதுமிலராகிய கீழோரது தன்மையாதலால், இது-எல்லாவற்றிற்கும்பின் வைக்கப்பட்டது.

ஆக-அதிகாரம்-௭௰



பொருட்பால்

முற்றிற்று





சிவமயம்

நாயனார் துணை.

மூன்றாவது

# காமத்துப்பால்.



திருவள்ளுவமாலையுள் - மோசிகீரனாரருளிய
காமத்துப்பால - அதிகாரத்தொகை
வெண்பா

ஆண்பாலே ழாறிரண்டு பெண்பாலடுத்தன்பு *
பூண்பா லிருபாலோ ராறாக - மாண்பாய *
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார் *
நாமத்தின் வள்ளுவனார் நன்கு *



இனி - அப்பொருளைத் துணைக்காரணமாக வுடைத்தாய் இம்
மையே பயப்பதாகிய - இன்பத்தைச் சொல்லும்
படி யெடுத்துக்கொண்டார்

இவ்விடத்து "காமம்" என்றது. (ஒருகாலத்தில் ஒருபொரு
ளால் கண்டுகேட் டுயிர்த்துற் றறிவதென்னும் ஐம்புலங்க
ளையும், அநுபவித்தற் சிறப்புடைத்தாகிய இன்பத்தினை

இது-புணர்ச்சி-பிரிவு-என இருவகைப்படும் மற்றை இருத்
தல்-இரங்கல்-ஊடல்-என்பனவோவெனில், இவர் பொருட்பா
ற்பாட்டினை அறம்-பொருள்-இன்பம்-என வடநூல்வழக்குப்
பற்றிச் சொல்லுதலால் - அப்படியே அவைகளைப் பிரிவினிட
த்து அடக்கினார்.

இனி-அவைகளையே தமிழ்நூல்களோடும் பொருந்த புணர்
ச்சியைக் (களவு) என்றும், பிரிவைக் (கற்பு) என்றும், பெரும்
பான்மைபற்றி வகுத்து அவைகளைச் சுவைமிகுதி யுண்டாக
உலகநடையோடு ஒத்தலும், ஒவ்வாமையு முடையனவாகச்
சொல்லுகின்றார் — அகத்தைக்கோள் இரண்டினுள்ளும் * களவா
வது (பிணி-மூப்பு-இறப்புகளில்லாமல எந்நாளு மொருதன்

மையராய் உருவும் - திருவும் - பருவமும்-குலமும்-குணமும்-அன்பும் - முதலானவைகளாலே தம்முள் ஒப்புமையுடையராகிய) தலைவனும், தலைவியும், பிறர் கொடுப்பவும், அடுப்பவும், இல்லாமல் ஊழ்வகையால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது * அதனை எழுதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி முதலில் தகையணங்குறுத்தல் சொல்லுகின்றார்.



## களவியல்.

ஆண்பால்



முதல்-ஆம்-அதி-தகையணங்குறுதகல்

(பொழிலவிளையாட்டு விருப்பால் மகளிர்கூட்டம் நீங்க-அதனிடத்துத் தனித்து நின்றவளை வேட்டைவிருப்பால் இளையவர் நீங்க தனித்துவந்து கண்ட தலைவன்) அவள் அழகு தனக்கு வருத்தமுடைகாகுதலைச் சொல்லுதல்.— இது - கண்டபொழுதே தோன்றுவதாகலால் முதலிலேசொல்லப்பட்டது

உ-ஆம்-அதி- குறிப்பறிதல்

தலைவன் தலைவிகுறிப்பை யறிதலும் - தோழிகுறிப்பை யறிதலும் - அததோழி அவ்விருவர்குறிப்பை யறிதலும் - தலைவியழகைக்கண்டு வருந்திய தலைவன் தலைவியைக் கூடும்போது இதுவேண்டுமாதலால் தகையணங்குறுத்தலின்பின் வைக்கப்பட்டது

ங-ஆம்-அதி-புணர்ச்சிமகிழ்தல.

அப்படிக் குறிப்பறிந்து புணர்ந்ததலைவன் அப்புணர்ச்சியை மகிழ்ந்துசொல்லுதல் அதிகாரமுறைமையு மிதனால் விளங்கும்

ச-ஆம்-அதி-நலம்புனைந்துரைத்தல்

தலைவன் - தலைவிநலத்தினை வருணித்துச் சொல்லியது — இது - புணர்ச்சியின் மகிழ்ந்தவிடத்து நிகழ்வதாகலால் அதன் பின்வைக்கப்பட்டது

ரு-ஆம்-அதி-காதறசிறப்புரைத்தல்

தலைவன் தன் ஆசைமிகுதியைச் சொல்லும் - தலைவி தன் ஆசைமிகுதியைச் சொல்லலுமாம் —இது-புணர்ச்சியும் - நல

னும் பற்றி நிகழ்கின்றதாகலால், அவற்றினதிகாரங்களின்பின் வைககப்பட்டது

௬-ஆம்-அதி-நாணுத்துறவுரைத்தல்

தாரப்படுத்தப்பட்டுப் பொருதவனாகிய தலைவனும், அறத்தோடு நிற்பிக்கத்தொடங்கிய தலைவியும், தமது நாணமிழந்து தலைச்சொல்லுதல்—இது-காதல் மிகுந்தவிடத்து நிகழ்வதாகலால், காதற்சிறப்புரைத்தலின்பின் வைக்கப்பட்டது

௭-ஆம்-அதி-அலரறிவுறுத்தல்

களவொழுக்கம் வேண்டியதலைவன் - பிறர்சொல்லுகின்ற அலர் தனக்கு ஆகின்ற விதத்தைத் தோழிக்கு அறிவித்தலும், மணமாக உடன்போக்காக ஒன்றுவேண்டிய தலைவியுந், தோழியும, அவ்வலரை அவனுக்கு அறிவுறுத்தலுமாம்.



இனிக்-கற்பியல்பதினெட்டு அதிகாரத்தாலே சொல்லத் தொடங்கி, அவற்றுள் இருகூறாகப் பிரிவாற்றாமை முதல்
அவர்வயின்விதும்பல் வரைக்கும், (௰௨) அதிகாரம்
பெண்பாலாகவும், குறிப்பறிவுறுத்தல் முதல
ஊடலுவகைவரைக்கும், (௬) அதிகாரம்
(ஆண்பாலும்பெண்பாலுமாகிய)
இருபாலாகவும், வகுத்துச்
சொல்லுகின்றார்

(இறையனாரகப்பொருள்) சூத்திரம்.

கற்பினுட்பிறவே கடிவரையின்றே *
ஓதல்காவல் பகைதணிவினையே *
வேந்தர்க்குற்றுழிப் பொருட்பிணி பரத்தையென்
றாங்கவ்வாறே யவ்வயிற்பிரிவே. *

(தொல்காப்பியம்) சூத்திரம்.

கற்பெனப்படுவது கரணமொடுபுணரக் *
கொளற்குரிமரபிற் கிழவன்கிழத்தியைக் *
கொடைக்குரிமரபினோர் கொடுப்பக்கொள்வதுவே.

(அகப்பொருள்விளக்கம்) சூத்திரம்.

பொற்பமைசிறப்பிற் கற்பெனப்படுவது *
மகிழ்வுமூடலு மூடலுணர்த்தலும் *
பிரிவும்பிறவு மருவியதாகும் *

# கற்பியல்.

## பெண்பால்.

முதலாம்- அதி- பிரிவாற்றாமை.

(மணஞ்செய்துகொண்டபின் தலைவன் அறம்- பொருள்- இன்பங்களின்பொருட்டுத் தலைவியைப்பிரிந்து தூரத்திலும், அவ்விடத்திலிருந்து செல்லுநாளில்) அப்பிரிவை அவள் பொறுக்கமாட்டாதவளாந்தன்மை. அது - இங்கே பிரிவை யறிவித்த தலைவனுக்குத் தோழிசொல்லலும், தோழிக்குத் தலைவி அவன் குறிப்பால் அறிந்துசொல்லலும், பிரிவை அறிவித்தவிடததுச் சொல்லலும், பிரிந்தவிடத்து ஆற்றுவிக்குமிடத்துத் தோழிக்குச்சொலலலும், எனும் நால்வகையாலே சொல்லப்படும்.

உ-ஆம்-அதி-படர்மெலிந்திரங்கல்

பிரிவுபொறுக்க மாட்டாதவளாகிய தலைவி தான் உறுகின்ற துன்பத்தை எப்போதும் நினைத்தலின் அந்நினைவால் மெலிந்து இரங்கலாம். அதிகாரமுறைமையு மிதனால விளங்கும்

ங-ஆம்-அதி-கண்விதுப்பழிதல்

கண்கள் தலைவனைக்காணுதற்கு விரைதலாலே வருந்துதல் இது-படராலே மெலிந்தவிடத்து நிகழ்வதாகலால்,அதன்பின் வைககப்பட்டது

ச-ஆம்-அதி-பசப்புறுபருவரல்.

(பசப்புறுதலாலாகிய வருத்தம்) பசப்பாவது பிரிவு பொறுமையால் வருவதோர் நிறவேறுபாடு இது-தலைவனைக்காணப்பெறுதவிடத்து நிகழ்வதாகலால் கணவிதுப்பழிதலின்பின் வைககப்பட்டது

ரு-ஆம்-அதி-தனிப்படர் மிகுதி

(தனியாகிய துன்பமிகுதி) அது - பசப்புற்று வருந்தியவளுக்கு உரியதாகலால் பசப்புறுபருவரலின்பின் வைககப்பட்டது.

சு-ஆம்-அதி-நினைந்தவர்புலம்பல்

முன்கூடியகாலத்தி னின்பத்தை நினைந்து பாசறையிடத்துத் தலைவன் தனிமையடைதலும், தலைவி தனிமையடைதலுமாம்.—இது - படர்மிகுதி தம்மிடத்ததாக நினைந்த தலைவி

கும் உரித்தாகலால், இச்சம்பந்தம் பற்றித் தனிப்படர் மிகுதியின் பின் வைக்கப்பட்டது.

எ-ஆம்-அதி-கனவுநிலை யுரைத்தல்

தலைவி - தான்கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லியது — அக்கனவு நனவினிடத்து நினைவுமிகுதியாலே கண்டதாகலால், இது-நினைந்தவர் புலம்பலின் பின் வைக்கப் பட்டது.

அ-ஆம்-அதி-பொழுதுகண்டிரங்கல்

மாலைப்பொழுது வந்தவிடத்து - அதனைக்கண்டு தலைவி இரங்குதல் கனவு முந்துறுதலினை யில்லையெம் பதுபற்றி - பகற்பொழுது பொறுத்திருந்த தலைவிக்கு உரியதாகலால், இது-கனவுநிலை யுரைத்தலின்பின் வைக்கப்பட்டது

கூ-ஆம்-அதி-உறுப்புநலனழிதல்

தலைவியினுடைய கண்ணுந்-தோளும - நெற்றியும்-முதலாகிய அவயவங்கள் தம் அழகு அழிதல் இது - இரக்கமிகுந்தவிடத்துநிகழ்வதாகலால், பொழுதுகண்டிரங்கலின்பின் வைக்கப்பட்டது

ய-ஆம்-அதி-நெஞ்சொடுகிளத்தல்.

பிறிவுபொறுமை மேற்படத் தனக்கோர் பற்றுக்கோடு காணாத தலைவி தன்னெஞ்சொடு செய்திறன் அறியாது சொல்லுதல் — இது - உறுப்புகள் தமது நலனழிந்தவழி நிகழ்வதாகலால், அதன்பின் வைக்கப்பட்டது.

யக-ஆம்-அதி-நிறையழிதல்.

தலைவி மனதிலே அடக்கப்படு மவைகளை ஆசைமிகுதியால் அடக்கமாட்டாமல் வாய்விடுதல் அது - அழிதற்குக்காரணம் நெஞ்சொடு சொல்லுதலால், ஈததன்பின் வைக்கப்பட்டது.

யஉ-ஆம்-அதி-அவர்வயின்விதும்பல்.

தூரதேசப்பிரிவிலே தலைவனுந் - தலைவியும் - ஆசைமிகுதியால ஒருவரையொருவர் காணுதற்கு விரைதல் இதனுள் தலைவிசொல் நிறையழிவு உண்டாதலால், அச்சம்பந்தப்பற்றி அதன்பின் வைக்கப்பட்டது



திருக்குறள் அதிகார வகுப்பு

(ஆண்பாலும்-பெண்பாலுமாகிய).

# இருபால்.

முதலாம்-அதி-குறிப்பறிவுறுத்தல்

தலைவன்-தலைவி-தோழி என்றிவர்கள் ஒருவர்குறிப்பையொருவர்க் கறிவுறுத்தல்.—இது - பிரிந்துபோகிய தலைவன் வந்து கூடியவிடத்தே நிகழ்வதாகலால், அவர்வயின் விதும்பலின் பின் வைக்கப்பட்டது

உ-ஆம்-அதி-புணர்ச்சிவிதும்பல்

தலைவனுந் தலைவியும் புணர்ச்சிக்கண்ணே விரைதல் மேலே புணர்ச்சி மிகுதிபற்றி - தலைவன் பிரிதற்குறிப்பை யறிவுறுத்த தலைவி அவனிடத்தே நிகழாது, ஆசைமிகுதியினாலே பின்னுந் தன்னிடத்தே நிகழ்தலால், இது - குறிப்பறி வுறுத்தலின்பின் வைக்கப்பட்டது

ந-ஆம்-அதி-நெஞ்சொடுபுலத்தல்

காரணமுண்டாகியவிடத்தும், பிணங்கநினையாமல் புணர்ச்சியை விரும்புகின்ற நெஞ்சுடனே தலைவி பிணங்கலும், தலைவன் பிணங்குதலுமாம்.— அதிகாரமுறைமையு மிதனால் விளங்கும்

ச-ஆம்-அதி-புலவி

இருவர்நெஞ்சும் புணர்ச்சிவிரும்பாது பிணங்க நினைத்தவிடத்து ஒருவரோடொருவர் பிணங்கல் அதிகாரமுறைமையு மிதனால் விளங்கும்

ரு-ஆம்-அதி-புலவிநுணுக்கம்.

தலைவனுந் தலைவியு மொருபடுக்கையிலே கூடியிருந்தவிடத்து அவ்விடத்துப் பிணங்குதற்குக் காரணமில்லாதிருக்கவும், ஆசை அதிகப்படுதலால் நுட்பமாகிய ஒருகாரண மிருக்கிறதாக உட்கொண்டு அதனைஅவன்மேலேற்றி அவள்பிணங்குதல், காரணத்தி னுணுக்கங் காரியத்தின்மே னின்றது அதிகாரமுறைமையு மிதனால் விளங்கும்

சு-ஆம்-அதி-ஊடலுவகை.

அப்படிப்பட்ட ஊடலால் தமக்குக்கூட லின்பஞ்சிறந்தவிடத்து அச்சிறப்புக்கு ஏதுவாகிய அவ்வூடலைத் தலைவி மகிழ்தலும், தலைவன் மகிழ்தலுமாம்

காமத்துப்பால்-முற்றிற்று.



உ

நாயகர் துணை.

ஔவையார்
அருளிச்செய்த

# ஆத்திசூடி.

குறளுதாரணத்துடன்
மூலமும்-உரையும்.

கடவுள் வாழ்த்து.

ஆத்திசூடி-யமர்ந்ததேவனை . . *
யேத்தியேத்தித்-தொழுவோமியாமே *

( இதன்பொருள்: )

ஆத்திசூடி - ஆத்திமாலையைச் சூடிய பரமசிவன், அமர்ந்த - விரும்பிய, தேவனை - மூத்தமகனாகிய விநாயகனை, ஏத்தியேத்தி, துதிசெய்து துதிசெய்து, தொழுவோம்-வணங்குவோம் யாம்-யாங்கள்.

க-அறஞ்செயவிரும்பு.

அறம்-தருமத்தை, செய-செய்தற்கு, விரும்பு-நீ யாசை கொள்ளு.

குறள்-ச-ம் அதி- அறன்வலியுறுத்தல்-சா-ம்-செய்யுள்.

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது . *
பொன்றுங்காற் பொன்றாத் துணை *

நாமிப்போ திளமைப்பருவமுடையேமாகையாலிறக்குங் காலத்திற் செய்வோமென்று நினையாது தருமத்தைச் செய்தாலது சரீரமழிந்துபோம்பொழு துயிர்க்கு அழிவில்லாத துணையா யுடன்செல்லு மென்பதாம்.

உ-ஆறுவதுசினம்.

ஆறுவது- உனக்குள்ளே தணியத்தகுவது, சினம்-கோபமேயாம்.

௩௰௧-ம்-அதி வெகுளாமை-௩-ம்-செய்யுள்.

மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய . . . . . *
பிறத்த லதனான் வரும். . . . . . . . . *

தன்னினுயர்ந்தோரு மொத்தோரு மிழிந்தோருமாகிய-மூத்திறத்தாருள் யாரொருவரிடத்துக்கோபஞ்செய்தாலும் அது தீயநினைவுகளை யெல்லா முண்டாக்கித் தன்னைக்கெடுக்கு மாதலால் ஒருவரிடத்துங்கோபஞ்செய்யலாகா தென்பதாம்.

௩-இயல்வது கரவேல்.

இயல்வது-கொடுப்பதற்கிசைவதை, கரவேல்-இரப்பவர்ககு ஒளியாதே

உ௰௩-ம்-அதி-ஈகை-௩-ம்-செய்யுள்.

இலனென்னு மெவ்வ முரையாமை யீதல் . *
குலனுடையான் கண்ணே யுள . *

யான் வறியனென்றிரப்பவன் சொல்லுகின்ற சொல்லைத்தான் பிறரிடத்துச்சொல்லாமையும், அதனைத்தன்னிடத்துச்சொன்னாக கில்லையென்னுது கொடுத்தலும், ஆகியவிரண்டும் நல்லகுடியிற பிறந்தவனிடத் துண்டென்பதாம்.

௪-ஈவது விலக்கேல்.

ஈவது- ஒருவருககு ஒருவர்கொடுப்பதை, விலக்கேல்- விலககாதே

௧௭-ம-அதி-அழுக்காறுமை-௬-ம்-செய்யுள்

கொடுப்ப தழுக்கறுப் பான்சுற்ற முடுப்பதூஉ *
முண்பதூஉ மின்றிக் கெடும் .. . *

பிறாபேற்றின்பொறாமை தன்பேற்றையேயன்றித் தன்சுற்றத்தின் பேற்றையு மிழப்பிக்கு மென்பதாம்

௫-உடையது விளம்பேல்

உடையது-உனககுள்ள ஆஸ்தியை, விளம்பேல்-பிறரறிய சொல்லாதே

௮௰௫-ம்-அதி-புல்லறிவாண்மை-௪-ம்- செய்யுள்.

வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை *
யுடையம்யா மென்னுஞ் செருக்கு. . *

உலகத்தாரிகழ்ந்த லறிந்திருந்தும் யாம் நல்லறிவினை யுடைய

மென்று தம்மைத்தாமே மதிக்கின்ற மயக்கமே புல்லறிவாண்மை யென்பதாம்

கூ-ஊக்கமது கைவிடேல்.

ஊக்கமது-செய்தொழிலில்- மனஞ்சோராமையை, கைவிடேல்-கைவிடாதே

சுய-ம்-அதி-ஊக்கமுடைமை-ச-ம்-செய்யுள்

ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா *
வூக்க முடையா னுழை . . . *

உள்ளக்கிளர்ச்சியை யுடையவனிடத்துச் செல்வந் தானேவழிகேட்டுக்கொண்டுவந்து சேரு மென்பதாம.

எ-எண்ணெழுத்திகழேல்

எண்-கணித நூலையும், எழுத்து - இலக்கண நூலையும், இகழேல்-இகழாமற் கற்றுக்கொள்ளு.

சய-ம்-அதி-கல்வி-உ-ம்-செய்யுள்

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு . *

அறநூன்முதலியவைகளை யறிதற்குக் கணிதநூலு மிலக்கண நூலுங் கருவியாகுமென்பதாம்

அ-ஏற்பதிகழ்ச்சி

ஏற்பது-ஒருவரிடத்திற்போய் இரப்பது,இகழ்ச்சி-உனக்குப் பழிப்பாகும்

ராஎ-ம்-அதி-இரவச்சம்-முதலாம்-செய்யுள்.

கரவாது வந்தீயுங் கண்ணன்னார் கண்ணு . *
மிரவாமை கோடி யுறும் . . . *

தமக்குள்ளதை யொளிக்காமற் கொடுப்பவரிடத்தும் - இரந்து செல்வமடைதலின் இரவாமையே மிக நன்றாகுமென்பதாம்

கூ- ஐயமிட் டுண்

ஐயம்-பிச்சையை,இட்டு-இரப்பவர்க்குகொடுத்து,உண்-நீயுமுண்ணு.

உயகூ-ம்-அதி-ஈகை-எ-ம்- செய்யுள்

ஆற்றுவா ராற்ற லிப்பசி யாற்ற லப்பசியை *
மாற்றுவா ராற்றலி னுரைபின் . *

தன்கையி லகப்பட்டதை யாசகர்க்குதவித் தானு முண்பவ னே தனக்குத்தானே வயித்தியனாகலால் பசிநோயவனைச் சேரா தென்பதாம்

௰-ஒப்புரவொழுகு

ஒப்புரவு-உலகநடையையறிந்து,ஒழுகு-அந்தவழியேநட உ௰உ-ம் அதி-ஒப்புரவறிதல்-ஈ-ம்-செய்யுள்,

புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே . *
யொப்புரவி னல்ல பிற . *

ஒப்புரவைப்போல நல்லசெயல்கள் விண்ணுலகத்து மண் ணுலகத்து மில்லையென்பதாம்

௰க-ஓதுவதொழியேல்,

ஓதுவது-நூல்களைவாசிப்பதில், ஒழியேல்- எப்போதும் நீங்காதே,

சா௰-ம்-அதி-கல்வி எ-ம்-செய்யுள்

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன் *
சாந்துணையுங்கல்லாத வாறு *

பிறர்நாடுகளுமூர்களுந் தன்னாடுந் தன்னூரும்போல உபச ரிக்குமாதலால் ஒருவன் கல்வியைக்கற்கவேண்டு மென்பதாம்,

௰உ-ஔவியம்பேசேல்.

ஔவியம் - பொறாமையாகிய சொல்லை, பேசேல் - எப் போதும் பேசாதே

௰எ-ம்-அதி-அழுக்காறாமை-ஈ-ம்-செய்யுள்

அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம் *
பேணா தழுக்கறுப் பான் . . *

பிறர்செல்வங்கண்டு பொறாமைகொள்பவன் அறத்தையும் புகழையு மிழப்பனென்பதாம்.

௰ஈ-அஃகஞ்சுருக்கேல்.

அஃகம்-தானியவிலையை, சுருக்கேல்- அதிகலாபத்துக்கா க குறையாதே

உக-ம்-அதி-தீவினையச்சம்-உ-ம்-செய்யுள்

தீயவை தீய பயத்தலாற் றீயவை . *
தீயினு மஞ்சப் படும் . *

ஒருவன்தனக் கிதத்தைக்குறித்துச் செய்யுந் தீவினை பின்கெ

ன்று வருத்துவதினாலே அப்படிப்பின்சென்று வருத்துதலில்லாத நெருப்பினுங் கொடியதென்று அதற்கஞ்சவேண்டு மென்பதாம்.

௯௪-கண்டொன்றுசொல்லேல்

கண்டு-ஒன்றைப்பார்த்து, ஒன்று-மற்றொன்றை, சொல்லேல்-சாட்சியாகும்போது சொல்லாதே

௩௰-ம்-அதி-வாய்மை ௩-ம்-செய்யுள்.

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின் *
றன்னெஞ்சே தன்னைச் சுடும் *

தன்னெஞ் சறிவதொன்றைப் பிறரறிந்திலரென் றொருவன் மறைப்பானாயின் அது மறையாதுநின்று பின்வருத்து மென்பதாம்.

௯௫-நுப்போல்வளை.

நுப்போல்-நுகரந் தான் பிரயோசன முள்ளதாகவிருந்து தன்வருக்கத்தைத் தழுவுதல்போல, வளை-நீ பிரயோசனமுள்ளவனாக விருந்து உன்னினத்தைத் தழுவு

௫௩-ம்-அதி-சுற்றந்தழால்-௭-ம்செய்யுள்

காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு *
மன்ன நீ ரார்க்கேயுள . . *

காக்கையைப்போ லழைத்து இனத்துட னுண்பவர்க்குச் செல்வம் பெருகு மென்பதாம்

௯௬-சனிநீராடு.

சனி-சனிக்கிழமைதோறும், நீர்-வெந்நீரில், ஆடு-நீயெண்ணெ யிட்டுக்கொண்டு தலைமுழுகு.

(ஆயுளும் வன்மையு மமைக்குமாதலால் ௬ திப்பயனுக்குரிய காலமாகக் கூறியது)

௪௯-ம்-அதி-காலமறிதல்-௩-ம்-செய்யுள்.

அருவினை யென்ப வுளவோ கருவியாற் *
கால மறிந்து செயின் . *

அருவினையென்பு-செய்தற்கரிய தொழில்களென்று சொல்லப்படுமவை, உளவோ-உண்டோ, கருவியால்-அவைகளை முடித்தற்காகுஞ் சாதநங்களுடனே, காலம்-காலத்தை, அறிந்து-தெரிந்து, செயின்-செய்தால், என்பதாம்.

௰௭. ஞயம்படவுரை.

ஞயம்பட - பேசுஞ்சொல்லிலே நயமுண்டாக, உரை - ஒருவருடன் பேசு

௰-ம்-அதி-இனியவைகூறல்-௯-ம்-செய்யுள்.

அல்லவை தேய வறம்பெருகு நல்லவை . . . *
நாடி யினிய சொலின் . . . . . *

ஒருவ னன்மையைத்தரு மின்சொற்களை யாராய்ந் தெடுத்துப் பேசுவானாயின் அவனிடத்துப் பாவங் குறையத் தருமமேலிட்டு வளருமென்பதாம்

௰௮-இடம்படவீடிடேல்.

இடம்பட-விசாலமுண்டாக,வீடு-வீட்டை,இடேல்- கட்டாதே

௪௰௭-ம்-அதி-தெரிந்துசெயல்வகை-முதலாஞ்செய்யுள்

அழிவதூஉ மாவதூஉ மாகிவழிபயக்கு . . . *
ஊதியமுஞ் சூழ்ந்து செயல் . . *

ஒருகருமத்தைச்செய்யும்போது செலவும் வரவு மிலாபமுமாராய்ந்து பயனுண்டெனின் செய்யக்கடவ னென்பதாம்

௰௯-இணக்கமறிந்திணங்கு

இணக்கம்-தக்ககுணத்தை, அறிந்து-இருக்கப்பார்த்து,இணங்கு-ஒருவரோடுசினேகஞ்செய்.

அ௰-ம்-அதி-நட்பாராய்தல்-௩-ம்-செய்யுள்

குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா *
வினனு மறிந்தியாக்க நட்பு .. . . *

குணமுதலாகியநான்குமுடையவனோடு நட்புசெய்கவென்பதாம்

௨௰-தந்தைதாய்ப்பேண்

தந்தை தகப்பனையும், தாய் - தாயையும், பேண் - காப்பாற்று

௯௰-ம்-அதி-பெரியாரைப்பிழையாமை-௨-ம்- செய்யுள்

பெரியாரைப் பேணாதொழுகிற் பெரியாரால் *
பேரா விடும்பை தரும் . . . . . . *

எல்லாம்வல்லபெரியோரை யவமதித்து நடத்தல் ஒருவனுக்கு நீங்காததுன்பங்களைத் தருமென்பதாம்.

உ௰௧ நன்றிமறவேல்

நன்றி-ஒருவர்செய்தவுபகாரத்தை, மறவேல்-எப்போதும் மறவாதே

௰௧-அதி-செய்ந்நன்றியறிதல்-அ-ம்-செய்யுள்.

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல *
 தன்றே மறப்பது நன்று. *

ஒருவன்றனே முன்பொருநன்றிசெய்து பின்புதீமைசெய்வானாயின் அவன் செய்தவவ்விரண்டினுள்ளுந் தீமையையப்பொழுதே மறந்து நன்றியை யெப்பொழுது மறவாமற்கொள்வதே தருமமாகுமென்பதாம்

உ௰உ-பருவத்தே பயிர்செய்

பருவத்தே-அது அது விளையுங்காலத்திலே, பயிர்செய்-பயிரிடு.

௪௰௯-ம்-அதி-காலமறிதல்-உ-ம்-செய்யுள்

பருவத்தோ டொட்ட வொழுகற் றிருவினைத் *
 தீராமை யார்க்குங் கயிறு *

காலம்பார்த்துப்போர்க்குச்செல்லுகின்ற வரசனெக்காலத்துஞ் செல்வத்துடனேவாழ்வனென்பதாம்

உ௰௩-மண்பறித்துண்ணேல்.

மண்-பிறர்விளைநிலத்தை, பறித்து-அபகரித்துக்கொண்டு உண்ணேல்-சீவனஞ்செய்யாதே

௰௮-ம்-அதி-வெஃகாமை-முதலாம்-செய்யுள்

நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக் *
 குற்றமு மாங்கே தரும் *

பிறர்க்குரியபொருளை யபகரிப்பது நமக்குத் தருமமன்றென்று நினைக்குநடுவு நிலையின்றியவரது நல்ல பொருளை யொருவன் விரும்புவானாயி னவ்விருப்பமான தவன்குடியைக் கெடச்செய்து குற்றத்தையு மப்பொழுதேதரு மென்பதாம்.

உ௰௪- இயல்பலாதனசெயேல.

இயல்பலாதன-தகாதகாரியங்களை, செயேல்- எப்போதும் பண்ணாதே.

௬௰௬-ம்-அதி-வினைத்தூய்மை முதலாம்செய்யுள்.

துணைநலமாக்கந் தரூஉம் வினைநலம் *
 வேண்டிய வெல்லாந் தரும் *

நல்லதுணையானது பொருளொன்றையே தருதலாலும், நல்லதொழிலானது அறம்பொருளின்பங்களைத் தருதலாலுங் காட்சிப் பொருளாகிய துணையிற கருத்துப் பொருளாகிய தொழிலே சிறந்ததென்பதாம.

உரு-அரவமாட்டேல்

அரவம்-நஞ்சுள்ளபாம்புகளை, ஆட்டேல்- பிடித்து ஆட்டாதே

அ௰அ-ம்-அதி-பகைத்திறந்தெரிதல் முதலாம்-செய்யுள்.

பகையென்னும் பண்பி லதனை யொருவ *
னகையேயும் வேண்டற்பாற் றன்று . .. *

பகையை விளையாட்டினிடத்து வேண்டினுங் கோபமே விளைந்துபின் மெய்யாமாதலா லவ்விடத்தும் வேண்டலாகா தென்பதாம்

உசு-இலவம்பஞ்சிற்றுயில்

இலவம்பஞ்சில்-இலவம்பஞ்சுமெத்தையில், துயில்-நீ நித்திரைசெய்

இது வாதசீதப்பிணிகளணுகாமையைச்செய்தலானும் நுண்மையறிவை மிக்க விளைத்தலானும்- துயிலுதற்குரிய தேயமெனக் கூறியது.

ருழ-ஆம்-அதி-இடனறிதல்-ஈ-ம்-செய்யுள்.

ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து *
போற்றார்கட் போற்றிச் செயின் *

ஆற்றாரும்-வலிமையில்லாதவரும், ஆற்றி-வலிமையுடையவராய், அடுப-வெல்வார், இடன்- (அதற்கேற்ற) இடத்தை, அறிந்து-தெரிந்து, போற்றி - தம்மைகாத்துக்கொண்டு, போறாரர்கண்- தம்மைநொய்யச்செய்யும் விரோதியினிடத்து, செயின் தக்கதொழிலைச் செய்வாராயின் என்பதனாற்காண்க.

உ௭-வஞ்சகம்பேசேல்

வஞ்சகம்-வஞ்சனையாகியசொற்களை, பேசேல்-எப்போதும்பேசாதே

உ௰அ-ம்-அதி-கூடாவொழுக்கம்-முதலாம்செய்யுள்.

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க *
ளைந்து மகத்தே நகும் . ...... *

காமம் தன்னுள்ளேதோன்றி வருத்த அதனைப் புறத்திலே காட்டாமன்மறைத்து நடப்பவனது திருட்டு நடத்தையைக்கண்டு உடம்பா யவனோடுகலந்துநிற்கின்றபஞ்சபூதங்களுந் தம்முள்ளே சிரிக்குமென்பதாம்

௨௰அ-அழகலாதனசெயேல்.

அழகலாதன- அழகல்லாதகாரியங்களை, செயேல்- செய்யாதே

௬௰௬-ம்-அதி-வினைத்தூய்மை-௪-ம்-செய்யுள்

இடுக்கட் படினு மிளிவந்த செய்யார் .. . *
நடுக்கற்ற காட்சி யவர் . ,. . *

அசைவற்ற வறிவுடையவர் துன்பம் வந்த காலத்திலு மிகழ் வைத்தருந் தொழில்களைச் செய்யாரென்பதாம்

௨௰௯-இளமையிற்கல்

இளமையில்-சிறுவயதிலே, கல்-வித்தையைக் கற்றுக்கொள்ளு.

௪௧-ம்-அதி-கல்லாமை-௩-ம்-செய்யுள்

கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து . *
சொல்லாடச் சோர்வு படும் . *

கல்லாதவர் கற்றவர்முன்னின்று பேசுமளவிற்பெருமையிழந்து அவமானமடைவ ரென்பதாம்

௩௰-அறனைமறவேல்

அறனை - செய்யததகக தருமததை, மறவேல் - எந்நாளு மறவாதே

௪-ம்-அதி-அறன்வலியுறுத்தல்-௨-ம்-செய்யுள

அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை *
மறத்தலினூஉங் கில்லை கேடு *

ஒருவனுக்குத் தருமஞ்செய்தலைப்பார்க்கிலு முயர்வைத்தருவதும், அத்தருமத்தை மயக்கத் தான் மறந்து விடுதலைப்பார்க்கிலுங் கேட்டைத்தருவதும் இல்லையென்பதாம்

௩௧-அனந்தலாடேல்

அனந்தல்-நித்திரையை,ஆடேல்-அதிகமாகச்செய்யாதே.

௫௪-ம்-அதி-பொச்சாவாமை-௩-ம்-செய்யுள்

பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத் *
தெப்பானூ லோர்க்குந் துணிவு *

மறதியையுடையவர்க்குக் கீர்த்தியில்லை யென்பது இந்தநூ லார்க்குமாத்திரமல்லாமல் மற்றெந்த நூலார்கரு முடன்பா டாம-ஆதலால் மறதியாகாதென்பதாம்

௩௨-கடிவதுமற

கடிவது-ஒருவரைககடிந்துபேசுவதை,மற-மறந்துவிடு.

ம-ம-அதி-இனியவைகூறல்-௯-ம்-செய்யுள்

இன்சொலினிதீன்றல் காண்பா னெவன் கொலோ *
வன்சொல் வழங்கு வது *

பிறாசொல்லிய வின்சொல்லானதுதனக கின்பந் தருதலை ய றுவித்தறிகின்றவன் பிறரிடத்துக் கடுஞ்சொல்லைப் பேசுவதெ ன்ன பிரயோசனத்தைக குறித்தோ வதுதெரிந்திலே மென்ப தாம்.

௩௩-காப்பதுவிரதம்

காப்பது உன்னாலே காப்பாற்றத்தகுவது, விரதம்-விரத மேயாம்

உஎ-ம்-அதி-தவம்-௧-ம்-செய்யுள்

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண செய்யாமை*
யற்றே தவத்திற் குரு *

உண்டி சுருககுதன்முதலாகிய விரதங்களால் வருந் துன்பங் களைப் பொறுப்பதும், பிறவுயிர்களுக்கு நோய் செய்யாமை யுமாகிய விரண்டுந் தவததிறகு வடிவமாகு மென்பதாம்.

௩௪-கிழமைப்படவாழ்

கிழமைப்பட - உன்பொருள் பிறருக்கு உரிமைப்பட, வாழ்-நீ வாழு

அ-ம்-அதி-அன்புடைமை-௨-ம்-செய்யுள்

அன்பிலா ரெல்லாந் தமககுரிய ரன்புடையா *
ரென்பு முரியர் பிறர்க்கு *

அன்பில்லாதவ ரெல்லாப்பொருளையுந் தமககெனவைத் தனுபவிப்பரென்று மன்புடையவர் தம் மெலும்பைக் கேட் பினும் பிறருக்கு உதவுவரென்றுஞ் சொல்லியதாம்.

௩௫-கீழ்மையகற்று.

கீழ்மை-இழிவுகளை, அகற்று-நீககு

ருஅ-ம்-அதி-கயமை-க-ம்-செய்யுள்

மக்களே போல்வர் கயவரவரன்ன .... *
வொப்பாரி யாங்கண்ட தில் *

மனிதர் சாதிக்குங் கீழோர்சாதிக்கு முருவமுழுது மொத்த லாற் குணங்களாலல்லது அவ்விருசாதிக்குமுள்ள வேற்றுமை யறியப்படா தென்பதாம்

ஙருகு-குணமது கைவிடேல்.

குணமது-குணமுள்ளதாகிய ஒன்றை, கைவிடேல்-விட்டு விடாதே

சுருகு-ம்-அதி-வினைத்திட்பம-கூ-ம்- செய்யுள்

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி *
யின்பம பயக்கும் வினை . *

துவககத்திலேமுயற்சியாற்றுன்பம்வரினு மதற்குத்தளராம ன் முடிவிற் சுகத்தைத்தருந்தொழிலை மனவலிமையாறசெய்க வென்பதாம்.

ஙருஎ-கூடிப் பிரியேல்

கூடி-(நல்லாரோடு) சிநேகித்து, பிரியேல்-பின்புஅவரை விட்டு நீங்காதே

அருக-ம்-அதி-பழமை-ஏ-ம்- செய்யுள்

அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின் *
வழிவந்த கேண்மை யவர் *

நட்பினாதமக்குககேடுசெய்தாலு மன்பையும பழைய தா கிய நட்பையுமுடையவ ரவர்மேலன்பு நீங்கா ரென்பதாம்.

ஙருஅ-கெடுப்பதொழி

கெடுப்பது-பிறருக்குக கேடுசெய்வதை, ஒழி- எககாலத் திலும் விட்டிரு

உருக-ம்-அதி-தீவினையச்சம-சு-ம்- செய்யுள்

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி *
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு *

ஒருவன் பிறனுக்குக் கேடு செய்தற் கெண்ணுவானுயி னப் பொழுதே யவனைக் கெடச்செய்து தரும நீங்குமாதலாலே தீ வினையை யெண்ணலாகா தென்பதாம்.

௱௰௬- கேள்விமுயல்

கேள்வி - பெரியோர் சொல்லைக் கேட்பதற்கு, முயல் - முயற்சிசெய்

௬௰௨-ம்-அதி-கேள்வி-௨-ம்- செய்யுள்.

கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற் *
கொற்கத்தி னூற்றாந் துணை *

ஒருவற்குக் கல்வியில்லையாயினுங் கேள்விமாத்திர முண்டெ னின் அதுவே தளர்ச்சிவந்தவிடத் ததை நீக்குமென்பதாம

௬௰- கைவினை கரவேல.

கைவினை-உனக்குத்தெரிந்ததொழிலை, கரவேல்- சமையத் தில் ஒளியாதே

௱௩-ம்-அதி- வாய்மை-௩-ம்- செய்யுள்.

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா *
ருள்ளத்து ளெல்லா முளன் *

தன்மனதறிற்கேற்பவொருவன் பொய்யாம னடப்பானாயி ன் அவனது தருமத்தி னருமை நோக்கியுயர்ந்தோர்பலருமவ னையே யெப்போது நினைப்பரென்பதாம்.

௬௰௧-கொள்ளை விரும்பேல

கொள்ளை- பிறர்பொருளைக கொள்ளையிட, விரும்பேல் ஆசைப்படாதே

௰௩-ம்-அதி-கள்ளாமை-௨-ம்-செய்யுள்

உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன் பொருளைக் *
கள்ளத்தாற கள்வே மெனல் *

ஒருவன் பிறன்பொருளை வஞ்சித்துத் திருடுதலேயன்றித் தி ருடநினைத்தலும அவனுககுப் பாவமாகுமென்பதாம்

௬௨- சோதாட்டொழி

சோது-குற்றம்பொருந்திய, ஆட்டு விளையாட்டை, ஒழி- நீக்கு.

௮௰௬-ம்-அதி-பேதைமை-௨-ம்- செய்யுள்

பேதைமையு ளெல்லாம் பேதைமைகா தன்மை *
கையல்ல தன்கட் செயல் *

இருமைக்குமாகாவென்றுநூலோர்கடிந்தசெயல்களை விரும் பிச்செய்தலே மிகுந்தபேதைமை யென்பதாம்.

சம௩ - சக்கரநெறிநில்

சக்கரநெறி-அரசனுடைய ஆணைவழியில், நில்- நீ அடங்கியிரு.

- ருரு-ம்-அதி-செங்கோன்மை-உ-ம்- செய்யுள்

வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன் *
கோனோக்கி வாழுங் குடி. *

உலகத்துயிர்களெல்லா மழையினால் வாழுமெனினுங் குடிகளரசன் செங்கோ லுளதாயின் வாழுமென்பதாம்

சச - சான்றோரினத்திரு

சான்றோர்-பெரியோருடைய, இனத்து-கூட்டத்தில், இரு-சேர்ந்திரு.

சரு-ம்-அதி-பெரியாரைத்துணைக்கோடல் ௬-ம்செய்யுள்.

தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச் *
செற்றார் செயக்கிடந்த தில் *

பெரியோரினத்திற்சேர்ந்து அவர்கருத்தின்படி நல்வழியிற் செல்லு மரசனுக்குப் பகைவராலொரு துன்பமு முண்டாகா தென்பதாம்.

சரு-சித்திரம் பேசேல்

சித்திரம் - ஆச்சரியச் சொல்லுகளை, பேசேல் வீணாகப் பேசாதே

உ௰-ம்-அதி பயனிலசொல்லாமை- ௩-ம்-செய்யுள்.

நயனில னென்பது சொல்லும் பயனில *
பாரித் துரைக்கு முரை *

பயனில்லாத சொற்களை விரித்துச் சொல்லுவனை அச்சொல்லைக்கொண்டே நீதியில்லாதவ னென்றறிய லாகு மென்பதாம்

சம௬-சீர்மைமறவேல்

சீர்மை-சிறப்பானகாரியங்களை, மறவேல் - எப்போதும் மறவாதே

௬அ-ம்-அதி-பெருமை-உ-ம்-செய்யுள்

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா *
செய்தொழில் வேற்றுமை யான் *

வினைவசத்தாற் பஞ்சபூதவிகாரமாகிய உடம்பைப்பெற்று நின்று அதன் பயனனுபவித்த லெல்லார்க்கு மொக்குமாயினு

ந் தொழில்களது வேறுபாட்டால் பெருமை சிறுமையென்னு ஞ் சிறப்பியல்க ளெவ்வாறெனபதாம்

௬௰௭-சுளிக்கச்சொல்லேல்

சுளிக்க-கேட்பவர் கோபிக்கும்படியாக,சொல்லேல்-ஒன் றும்பேசாதே

௬௰௭-ம்-அதி சொல்வன்மை

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க்,கேளாரும் *
வேட்ப மொழிவதாஞ் சொல் *

நட்பாய்க்கேட்டவரைப் பின் பிரியாமற் செய்யுங் குணங்க ளை யவாவிப் பகையாய்க் கேளாதாரும நட்பைவிரும்பச்சொ ல்லப்படுவதே சொலலென்பதாம்

௬௰௮-சூதுவிரும்பேல்

சூது- சூதமாடுதற்கு, விரும்பேல-எப்போதும் ஆசைப் படாதே

௬௰௮-ம்-அதி-சூது-௯-ம்-செய்யுள்

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந் *
தூணடிற்பொன் மீன்விழுங்கி யற்று *

சூதாட்டத்தில் வென்றுகொள்ளும்பொருள் இரையென்று மீன்விழுங்கிய தூண்டின் முள்ளைப்போலச் சூதாடுவார் நீங் காமைக்கிட்ட தோர் தூண்டியாகி மற்றைத் தொழில்களை யெல லாங் கெடுத்தும், பின்பு துன்பத்தைத் தருதலால் ஒருவன் தனக்குச் சூதாடுதலில வெலலவல்லமையிருந்தாலு மதுசெய் யாமல் விடுகவென்பதாம

௬௯-செய்வனதிருந்தச்செய்

செய்வன-செய்யுங்காரியங்களை, திருந்தச்செய் செவ்வை யாகச்செய்

௬௯-ம்-அதி-தெரிந்துசெயல்வகை-௨-ம்-செய்யுள்

தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க் *
கரும்பொருள் யாதொன்று மில *

நல்லினத்தொடு கூடியாராய்ந்து பின்பு தனித்துமாலோ சித்துச் செய்பவற்கு முடியாத தொன்றுமில்லை யென்பதாம்.

௭௰-சேரிடமறிந்துசேர்

சேரிடம்-சேரத்தகுமிடத்தை, அறிந்து-தெரிந்து, சேர்- நீ சேரு.

௫௰-ம்-அதி-இடனறிதல்-௭-ம்-செய்யுள்

அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை *
யெண்ணி யிடத்தாற் செயின் *

குறைவறமுழுது மெண்ணி யிடம்பெறலும் போரசெய்யு மரசற்கு அஞ்சாமையொன்றே போதும் வேறுதுணை வேண்டுவதில்லை யென்பதாம்

௫௧-சையெனத்திரியேல்

சையென-சீயென்று பிறரிகழ, திரியேல் - பொல்லாங்கு செய்து திரியாதே

௨௪-ம-அதி-புகழ்-௰-ம்-செய்யுள்

வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய *
வாழ்வாரே வாழா தவர் *

பழியின்றி வாழ்வாரே உயிர்வாழ்வாரென்றும புகழின்றிவாழ்வாரே இறந்தவரென்றுங கூறியதாம்

௫௨-சொற்சோர்வுபடேல்

சொல்-பேசுஞ்சொல்லில், சோர்வு குறறதலை, படேல்-அடையாதே

௬௫ ம-அதி-சொல்வன்மை-எ-ம்-செய்யுள்

சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை *
யிகல்வெல்லல் யார்க்கு மரிது *

இம்மூன்று குணங்களையு முடை யவனைப் பகைவராய்ப்பிரித்தல் பொருத்தலசெய்து வெல்லுத லொருவற்கு மாகாதென்பதாம்

௫௩ - சோம்பித்திரியேல்

சோம்பி-சோம்பலடைந்து, திரியேல் - விருதாத்திரியாதே

௬௧-ம்-அதி- மடியின்மை-௩-ம-செய்யுள்

மடிமடிககொண டொழுகும் பேதை பிறந்த *
குடிமடியுந் தன்னினு முந்து *

சோம்பலை யுட்கொண்டு நடககின்ற மூடன் பிறந்த குடி அவ னழிதற்கு முன்னுகவே காப்பவரிலலாம லழியுமெனபதாம்

௫௪-தககோனெனத்திரி

தககோனென - யோககியனென்று சொல்லும்படியாக, திரி-பேரொடு நடத்திரி.

